Bible Minutes

சிறுவர்களுக்கான, மிக முக்கியமான 100

# மனன வசனங்கள்

## பாகம் 1



Yesudas Solomon | David G Emmanuel

# **மனனம் செய்வதால் கிடைக்கும் நன்மைகள்**

அவனுடைய தேவன் அருளியவேதம் அவன் இருதயத்தில் இருக்கிறது, அவன் நடைகளில் ஒன்றும் **பிசகுவதில்லை** – சங் 37:31

சத்தியவேதம் அவன் வாயில் இருந்தது; அவனுடைய **உதடுகளில் அநியாயம் காணப்படவில்லை**; அவன் என்னோடே சமாதானமும் யதார்த்தமுமாய்ச் **சஞ்சரித்து**, அநேகரை அக்கிரமத்தினின்று **திருப்பினான்** - மல்கியா 2:6

நான் உமக்கு விரோதமாய்ப் **பாவஞ்செய்யாதபடிக்கு**, உமது வாக்கை என்னிருதயத்தில் வைத்து வைத்தேன் - சங்கீதம் 119:11

சிறுவர்களுக்கான, மிக முக்கியமான 100

# மனன வசனங்கள்

## பாகம் 1

You can download the PDF version freely from www.WordOfGod.in and print yourself with the options

Landscape, A4 Size, Booklet Type & Print on Both sides, after printing cut in the center of the page

**By:**

Yesudas Solomon, David G Emmanuel, Bible Minutes, www.WordOfGod.in

WOGBOOKS4
First Edition – 2019

**Editors:**

Yesudas Solomon & David G Emmanuel

Bible Minutes, a unit of Word of God Ministries

www.WordOfGod.in

**Copyright:**



**Contact Us:**

**Email:** wordofgod@wordofgod.in

**Mobile/WhatsApp:** +91 90190 49070; +91 7676 50 5599

# பொருளடக்கம்

# முன்னுரை

தேவனுடைய உன்னத நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள். இந்த புத்தகத்தை உங்களுக்கு கொடுப்பதில் மிக்க மகிழ்ச்சி அடைகிறோம். தேவனுடைய வார்த்தைகளாகிய வேத வசனங்களை மனப்பாடம் செய்ய வேண்டும் என்று தீர்மானம் எடுத்திருக்கும் உங்களின் மேலான எண்ணம் நிறைவேற தேவன் சகல வகையிலும் உதவி செய்வாராக.

தேவனுடைய வார்த்தைகளை நம்முடைய இருதயத்தில் பதிய வைக்கும் போது கிடைக்கும் ஆசீர்வாதங்கள் ஏராளம். அந்த வார்த்தைகளை இரவும் பகலும் தியானித்துக்கொண்டிருக்கும் போது இன்னும் அதிகமாய் ஆசீர்வதிக்கப்படுகிறோம். தேவனுடைய சித்தத்தை அறிந்துக்கொள்ள மிகவும் சிறந்த வழி இதுவே. இந்த ஜீவனுள்ள வார்த்தையானது சத்துருவின் நாச மோசங்களினின்றும், பிசாசின் வஞ்சகத்தினின்றும் நம்மை எச்சரித்து நடத்தும், நம்மை பாதுக்காத்து பரலோகம் செல்ல உதவும். இப்படி சொல்லிக்கொண்டே போகலாம்.

வேத வசனங்களை மனப்பாடம் செய்யும் முன்பு இந்த வசனங்களால் எனக்கு "சகல ஆவிக்குரிய ஆசீர்வாதங்கள்" கிடைக்க வேண்டும் என்று ஜெபம் செய்து தொடருங்கள். தேவன் நிச்சயமாக தம்முடைய வார்த்தையினால் கிடைக்கு ஆசீர்வாதங்களை உங்களுக்கு கொடுப்பார். ஆமேன்.

ஆசிரியர்

| எண் | வசனம்<br>(ஒரு நாளைக்கு ஒன்றுக்கு மேற்ப்பட்ட வசனங்களை மனனம் செய்யலாம்) | தேதி | கண்காணி கையொப்பம் |
|---|---|---|---|
| 1 | ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார் - ஆதியாகமம் 1:1 | | |
| 2 | ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள்; பரலோகராஜ்யம் அவர்களுடையது - மத்தேயு 5:3 | | |
| 3 | துயரப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் ஆறுதலடைவார்கள் - மத்தேயு 5:4 | | |
| 4 | சாந்தகுணமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள் - மத்தேயு 5:5 | | |
| 5 | நீதியின்மேல் பசிதாகமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் திருப்தியடைவார்கள் - மத்தேயு 5:6 | | |
| 6 | இரக்கமுடையவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் இரக்கம் பெறுவார்கள் - மத்தேயு 5:7 | | |
| 7 | இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள் - மத்தேயு 5:8 | | |

| | | | |
|---|---|---|---|
| 8 | சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனுடைய புத்திரர் என்னப்படுவார்கள் - மத்தேயு 5:9 | | |
| 9 | ஜீவ அப்பம் நானே - யோவான் 6:48 | | |
| 10, 12 | கர்த்தர் உன்னை ஆசீர்வதித்து, உன்னைக் காக்கக்கடவர் - எண்ணாகமம் 6:24<br>கர்த்தர் தம்முடைய முகத்தை உன்மேல் பிரகாசிக்கப்பண்ணி, உன்மேல் கிருபையாயிருக்கக்கடவர் - எண்ணாகமம் 6:25<br>கர்த்தர் தம்முடைய முகத்தை உன்மேல் பிரசன்னமாக்கி, உனக்குச் சமாதானம் கட்டளையிடக்கடவர் என்பதே - எண்ணாகமம் 6:26 | | |
| 13 | கர்த்தருக்குள் எப்பொழுதும் சந்தோஷமாயிருங்கள்; சந்தோஷமாயிருங்கள் என்று மறுபடியும் சொல்லுகிறேன் - பிலிப்பியர் 4:4 | | |
| 14 | மெய்ச்சாட்சிக்காரன் பொய்சொல்லான்; பொய்ச்சாட்சிக்காரனோ பொய்களை ஊதுகிறான் - நீதிமொழிகள் 14:5 | | |
| 15 | இயேசுகிறிஸ்து நேற்றும் இன்றும் என்றும் மாறாதவராயிருக்கிறார் - எபிரெயர் 13:8 | | |

| | | | |
|---|---|---|---|
| 16 | பூமியிலுள்ளவைகளையல்ல, மேலானவைகளையே நாடுங்கள் - கொலோசெயர் 3:2 | | |
| 17 | நீங்கள் உலகத்துக்கு வெளிச்சமாயிருக்கிறீர்கள்; மலையின்மேல் இருக்கிற பட்டணம் மறைந்திருக்கமாட்டாது - மத்தேயு 5:14 | | |
| 18 | பிள்ளைகளே, உங்களைப் பெற்றாருக்கு எல்லாக் காரியத்திலேயும் கீழ்ப்படியுங்கள்; இது கர்த்தருக்குப் பிரியமானது - கொலோசெயர் 3:20 | | |
| 19 | நான் பயப்படுகிற நாளில் உம்மை நம்புவேன் - சங்கீதம் 56:3 | | |
| 20 | இது கர்த்தர் உண்டுபண்ணின நாள்; இதிலே களிகூர்ந்து மகிழக்கடவோம் - சங்கீதம் 118:24 | | |
| 21 | உம்முடைய வசனம் என் கால்களுக்குத் தீபமும், என் பாதைக்கு வெளிச்சமுமாயிருக்கிறது - சங்கீதம் 119:105 | | |
| 22 | கர்த்தரைத் துதியுங்கள்; அவர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்ளது - சங்கீதம் 136:1 | | |
| 23 | கர்த்தர் எல்லார்மேலும் தயவுள்ளவர்; அவர் இரக்கங்கள் அவருடைய எல்லாக் கிரியைகளின்மேலுமுள்ளது - சங்கீதம் 145:9 | | |

| | | | |
|---|---|---|---|
| 24 | என்னைப் பெலப்படுத்துகிற கிறிஸ்துவினாலே எல்லாவற்றையுஞ்செய்ய எனக்குப் பெலனுண்டு - பிலிப்பியர் 4:13 | | |
| 25 | நானே நல்ல மேய்ப்பன்; நல்ல மேய்ப்பன் ஆடுகளுக்காகத் தன் ஜீவனைக் கொடுக்கிறான் - யோவான் 10:11 | | |
| 26 | நீ உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும், உன் முழுப் பலத்தோடும் அன்புகூருவாயாக - உபாகமம் 6:5 | | |
| 27 | ஆகையால் நீங்கள் புசித்தாலும், குடித்தாலும், எதைச் செய்தாலும், எல்லாவற்றையும் தேவனுடைய மகிமைக்கென்று செய்யுங்கள் - 1 கொரிந்தியர் 10:31 | | |
| 28 | அவர் இங்கே இல்லை; தாம் சொன்னபடியே உயிர்த்தெழுந்தார்; கர்த்தரை வைத்த இடத்தை வந்து பாருங்கள்; - மத்தேயு 28:6 | | |
| 29 - 31 | எப்பொழுதும் சந்தோஷமாயிருங்கள் - 1 தெசலோனிக்கேயர் 5:16<br>இடைவிடாமல் ஜெபம்பண்ணுங்கள் - 1 தெசலோனிக்கேயர் 5:17 | | |

| | | | |
|---|---|---|---|
| | எல்லாவற்றிலேயும் ஸ்தோத்திரஞ் செய்யுங்கள்; அப்படிச் செய்வதே கிறிஸ்து இயேசுவுக்குள் உங்களைக்குறித்துத் தேவனுடைய சித்தமாயிருக்கிறது - 1 தெசலோனிக்கேயர் 5:18 | | |
| 32 | நான் உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்யாதபடிக்கு, உமது வாக்கை என்னிருதயத்தில் வைத்து வைத்தேன் - சங்கீதம் 119:11 | | |
| 33 | வானமும் பூமியும் ஒழிந்துபோம், என் வார்த்தைகளோ ஒழிந்துபோவதில்லை - மத்தேயு 24:35 | | |
| 34 | சத்தியத்தையும் அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும் என்றார் - யோவான் 8:32 | | |
| 35 | கர்த்தர் ஞானத்தைத் தருகிறார்; அவர் வாயினின்று அறிவும் புத்தியும் வரும் - நீதிமொழிகள் 2:6 | | |
| 36 | அல்லாமலும், நீங்கள் உங்களை வஞ்சியாதபடிக்குத் திருவசனத்தைக் கேட்கிறவர்களாய் மாத்தரமல்ல, அதின்படி செய்கிறவர்களாயும் இருங்கள் - யாக்கோபு 1:22 | | |

| | | | |
|---|---|---|---|
| 37 | வாலிபன் தன் வழியை எதினால் சுத்தம்பண்ணுவான்? உமது வசனத்தின்படி தன்னைக் காத்துக்கொள்ளுவதினால்தானே - சங்கீதம் 119:9 | | |
| 38 | கர்த்தர் உங்களுக்காக யுத்தம்பண்ணுவார்; நீங்கள் சும்மாயிருப்பீர்கள் என்றான் - யாத்திராகமம் 14:14 | | |
| 39 | தேவன் நமக்கு அடைக்கலமும் பெலனும், ஆபத்துக்காலத்தில் அநுகூலமான துணையுமானவர் - சங்கீதம் 46:1 | | |
| 40 | அதற்கு இயேசு: நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்; என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான் - யோவான் 14:6 | | |
| 41 | கர்த்தரே ஆவியானவர்; கர்த்தருடைய ஆவி எங்கேயோ அங்கே விடுதலையுமுண்டு - 2 கொரிந்தியர் 3:17 | | |
| 42 | பாவத்தின் சம்பளம் மரணம்; தேவனுடைய கிருபைவரமோ நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினால் உண்டான நித்தியஜீவன் - ரோமர் 6:23 | | |
| 43 | நாம் பாவிகளாயிருக்கையில் கிறிஸ்து நமக்காக மரித்ததினாலே, தேவன் நம்மேல்வைத்த தமது அன்பை விளங்கப்பண்ணுகிறார் - ரோமர் 5:8 | | |

| | | | |
|---|---|---|---|
| 44, 45 | ஆவியின் கனியோ, அன்பு, சந்தோஷம், சமாதானம், நீடியபொறுமை, தயவு, நற்குணம், விசுவாசம், சாந்தம், இச்சையடக்கம்; இப்படிப்பட்டவைகளுக்கு விரோதமான பிரமாணம் ஒன்றுமில்லை - கலாத்தியர் 5: 22-23 | | |
| 46 | உம்மை என் முழு இருதயத்தோடும் துதிப்பேன்; தேவர்களுக்கு முன்பாக உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன் - சங்கீதம் 138:1 | | |
| 47 | அன்றியும், நீங்கள் மீட்கப்படும் நாளுக்கென்று முத்திரையாகப் பெற்ற தேவனுடைய பரிசுத்தஆவியைத் துக்கப்படுத்தாதிருங்கள் - எபேசியர் 4:30 | | |
| 48 | அவர் உங்களை விசாரிக்கிறவரானபடியால், உங்கள் கவலைகளையெல்லாம் அவர்மேல் வைத்துவிடுங்கள் - 1 பேதுரு 5:7 | | |
| 49 | அதற்கு அவர்கள்: கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசி, அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள்... - அப்போஸ்தலர் 16:31 | | |
| 50 | காரியத்தின் கடைத்தொகையைக் கேட்போமாக, தேவனுக்குப் பயந்து, அவர் கற்பனைகளைக் கைக்கொள்; எல்லா மனுஷர்மேலும் விழுந்த கடமை இதுவே - பிரசங்கி 12:13 | | |

| | | | |
|---|---|---|---|
| 51 | கர்த்தரை என்றென்றைக்கும் நம்புங்கள்; கர்த்தராகிய யேகோவா நித்திய கன்மலையாயிருக்கிறார் - ஏசாயா 26:4 | | |
| 52 | நாம் தேவனுடைய கற்பனைகளைக் கைக்கொள்வதே அவரிடத்தில் அன்புகூருவதாம்; அவருடைய கற்பனைகள் பாரமானவைகளுமல்ல - 1 யோவான் 5:3 | | |
| 53 | தேவன், தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார் - யோவான் 3:16 | | |
| 54 | பிள்ளைகளே, நீங்கள் தேவனால் உண்டாயிருந்து, அவர்களை ஜெயித்தீர்கள்; ஏனெனில் உலகத்திலிருக்கிறவனிலும் உங்களிலிருக்கிறவர் பெரியவர் - 1 யோவான் 4:4 | | |
| 55 | தேவன் நமக்குப் பயமுள்ள ஆவியைக் கொடாமல், பலமும் அன்பும் தெளிந்த புத்தியுள்ள ஆவியையே கொடுத்திருக்கிறார் - 2 தீமோத்தேயு 1:7 | | |

| | | | |
|---|---|---|---|
| 56 | ஒருவருக்கொருவர் தயவாயும் மனஉருக்கமாயும் இருந்து, கிறிஸ்துவுக்குள் தேவன் உங்களுக்கு மன்னித்ததுபோல, நீங்களும் ஒருவருக்கொருவர் மன்னியுங்கள் - எபேசியர் 4:32 | | |
| 57 | நீங்கள் குற்றவாளிகளென்று தீர்க்கப்படாதபடிக்கு மற்றவர்களைக் குற்றவாளிகளென்று தீர்க்காதிருங்கள் - மத்தேயு 7:1 | | |
| 58 | மோசம்போகாதிருங்கள்; ஆகாத சம்பாஷணைகள் நல்லொழுக்கங்களைக் கெடுக்கும் - 1 கொரிந்தியர் 15:33 | | |
| 59 | ஞானிகளோடே சஞ்சரிக்கிறவன் ஞானமடைவான்; மூடருக்குத் தோழனோ நாசமடைவான் - நீதிமொழிகள் 13:20 | | |
| 60 | நம்பிக்கையிலே சந்தோஷமாயிருங்கள்; உபத்திரவத்திலே பொறுமையாயிருங்கள்; ஜெபத்திலே உறுதியாய்த்தரித்திருங்கள் - ரோமர் 12:12 | | |
| 61, 62 | நீங்கள் ஒன்றுக்குங் கவலைப்படாமல், எல்லாவற்றையுங்குறித்து உங்கள் விண்ணப்பங்களை ஸ்தோத்திரத்தோடே கூடிய ஜெபத்தினாலும் வேண்டுதலினாலும் தெரியப்படுத்துங்கள் - பிலிப்பியர் 4:6 | | |

| | | | |
|---|---|---|---|
| | அப்பொழுது, எல்லாப் புத்திக்கும் மேலான தேவசமாதானம் உங்கள் இருதயங்களையும் உங்கள் சிந்தைகளையும் கிறிஸ்து இயேசுவுக்குள்ளாகக் காத்துக்கொள்ளும் - பிலிப்பியர் 4:7 | | |
| 63 | முதலாவது தேவனுடைய ராஜ்யத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள், அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக்கூடக் கொடுக்கப்படும் - மத்தேயு 6:33 | | |
| 64 | சோர்ந்துபோகிறவனுக்கு அவர்பெலன் கொடுத்து, சத்துவமில்லாதவனுக்குச் சத்துவத்தைப் பெருகப்பண்ணுகிறார் - ஏசாயா 40:29 | | |
| 65 | கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்களோ புதுப்பெலன் அடைந்து, கழுகுகளைப்போலச் செட்டைகளை அடித்து எழும்புவார்கள்; அவர்கள் ஓடினாலும் இளைப்படையார்கள், நடந்தாலும் சோர்ந்துபோகார்கள் - ஏசாயா 40:31 | | |
| 66 | அவனவன் விசனமாயுமல்ல, கட்டாயமாயுமல்ல, தன் மனதில் நியமித்தபடியே கொடுக்கக்கடவன்; உற்சாகமாய்க் கொடுக்கிறவனிடத்தில் தேவன் பிரியமாயிருக்கிறார் - 2 கொரிந்தியர் 9:7 | | |

| | | | |
|---|---|---|---|
| 67 | நன்மையான எந்த ஈவும் பூரணமான எந்த வரமும் பரத்திலிருந்துண்டாகி, சோதிகளின் பிதாவினிடத்திலிருந்து இறங்கிவருகிறது; அவரிடத்தில் யாதொரு மாறுதலும் யாதொரு வேற்றுமையின் நிழலுமில்லை - யாக்கோபு 1:17 | | |
| 68 | கர்த்தர் நல்லவர் என்பதை ருசித்துப்பாருங்கள்; அவர்மேல் நம்பிக்கையாயிருக்கிற மனுஷன் பாக்கியவான் – சங்கீதம் 34:8 | | |
| 69 | நாம் அவருடைய குமாரனாகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தின்மேல் விசுவாசமாயிருந்து, அவர் நமக்குக் கட்டளையிட்டபடி ஒருவரிலொருவர் அன்பாயிருக்கவேண்டுமென்பதே அவருடைய கற்பனையாயிருக்கிறது - 1 யோவான் 3:23 | | |
| 70 | உன்னிடத்தில் நீ அன்புகூருவதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூருவாயாக, என்கிற இந்த ஒரே வார்த்தையிலே நியாயப்பிரமாணம் முழுவதும் நிறைவேறும் – கலாத்தியர் 5:14 | | |
| 71 | கர்த்தருடைய சொற்கள் மண்குகையில் ஏழுதரம் உருக்கி, புடமிடப்பட்ட வெள்ளிக்கொப்பான சுத்த சொற்களாயிருக்கிறது – சங்கீதம் 12:6 | | |

| | | | |
|---|---|---|---|
| 72 | நீங்கள் அமர்ந்திருந்து, நானே தேவனென்று அறிந்துகொள்ளுங்கள்; ஜாதிகளுக்குள்ளே உயர்ந்திருப்பேன், பூமியிலே உயர்ந்திருப்பேன் - சங்கீதம் 46:10 | | |
| 73 | மோசம்போகாதிருங்கள், தேவன் தம்மைப் பரியாசம்பண்ணவொட்டார்; மனுஷன் எதை விதைக்கிறானோ அதையே அறுப்பான் - கலாத்தியர் 6:7 | | |
| 74 | தேவனுடைய வார்த்தையானது ஜீவனும் வல்லமையும் உள்ளதாயும், இருபுறமும் கருக்குள்ள எந்தப் பட்டயத்திலும் கருக்கானதாயும், ஆத்துமாவையும் ஆவியையும், கணுக்களையும் ஊனையும் பிரிக்கத்தக்கதாக உருவக் குத்துகிறதாயும், இருதயத்தின் நினைவுகளையும் யோசனைகளையும் வகையறுக்கிறதாயும் இருக்கிறது - எபிரெயர் 4:12 | | |
| 75 | கர்த்தருடைய வார்த்தை உத்தமமும், அவருடைய செய்கையெல்லாம் சத்தியமுமாயிருக்கிறது - சங்கீதம் 33:4 | | |
| 76 | கர்த்தரை நான் எக்காலத்திலும் ஸ்தோத்திரிப்பேன்; அவர் துதி எப்போதும் என் வாயிலிருக்கும் - சங்கீதம் 34:1 | | |

| | | | |
|---|---|---|---|
| 77 | தேவரீர் என் விளக்கை ஏற்றுவீர்; என் தேவனாகிய கர்த்தர் என் இருளை வெளிச்சமாக்குவார் - சங்கீதம் 18:28 | | |
| 78 | யூதனென்றும் கிரேக்கனென்றும் வித்தியாசமே இல்லை; எல்லாருக்குங் கர்த்தரானவர் தம்மைத் தொழுதுகொள்ளுகிற யாவருக்கும் ஐசுவரியசம்பன்னராயிருக்கிறார் - ரோமர் 10:12 | | |
| 79 | என் கன்மலையும் என் மீட்பருமாகிய கர்த்தாவே, என் வாயின் வார்த்தைகளும், என் இருதயத்தின் தியானமும், உமது சமுகத்தில் பிரீதியாயிருப்பதாக - சங்கீதம் 19:14 | | |
| 80 | உங்கள் இருதயம் கலங்காதிருப்பதாக; தேவனிடத்தில் விசுவாசமாயிருங்கள், என்னிடத்திலும் விசுவாசமாயிருங்கள் - யோவான் 14:1 | | |
| 81 | கெட்ட வார்த்தை ஒன்றும் உங்கள் வாயிலிருந்து புறப்படவேண்டாம்; பக்திவிருத்திக்கு ஏதுவான நல்ல வார்த்தை உண்டானால் அதையே கேட்கிறவர்களுக்குப் பிரயோஜனமுண்டாகும்படி பேசுங்கள் - எபேசியர் 4:29 | | |
| 82 | கர்த்தருக்குப் பயப்படுதலே ஞானத்தின் ஆரம்பம்; மூடர் ஞானத்தையும் போதகத்தையும் அசட்டைபண்ணுகிறார்கள் – நீதிமொழிகள் 1:7 | | |

| | | | |
|---|---|---|---|
| 83 | அந்தப்படியே ஆவியானவரும் நமது பலவீனங்களில் நமக்கு உதவிசெய்கிறார். நாம் ஏற்றபடி வேண்டிக்கொள்ள வேண்டியதின்னதென்று அறியாமலிருக்கிறபடியால், ஆவியானவர்தாமே வாக்குக்கடங்காத பெருமூச்சுகளோடு நமக்காக வேண்டுதல்செய்கிறார் - ரோமர் 8:26 | | |
| 84 | என் நாமத்தினாலே பிதா அனுப்பப்போகிற பரிசுத்த ஆவியாகிய தேற்றரவாளனே எல்லாவற்றையும் உங்களுக்குப் போதித்து, நான் உங்களுக்குச் சொன்ன எல்லாவற்றையும் உங்களுக்கு நினைப்பூட்டுவார் - யோவான் 14:26 | | |
| 85 | திருடன் திருடவும் கொல்லவும் அழிக்கவும் வருகிறானேயன்றி வேறொன்றுக்கும் வரான். நானோ அவைகளுக்கு ஜீவன் உண்டாயிருக்கவும், அது பரிபூரணப்படவும் வந்தேன் - யோவான் 10:10 | | |
| 86 | அவருடைய நாமத்தின்மேல் விசுவாசமுள்ளவர்களாய் அவரை ஏற்றுக்கொண்டவர்கள் எத்தனைபேர்களோ, அத்தனைபேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும்படி, அவர்களுக்கு அதிகாரங் கொடுத்தார் - யோவான் 1:12 | | |

| | | | |
|---|---|---|---|
| 87 | என்னிடத்தில் உங்களுக்குச் சமாதானம் உண்டாயிருக்கும்பொருட்டு இவைகளை உங்களுக்குச் சொன்னேன். உலகத்தில் உங்களுக்கு உபத்திரவம் உண்டு, ஆனாலும் திடன்கொள்ளுங்கள்; நான் உலகத்தை ஜெயித்தேன். என்றார் - யோவான் 16:33 | | |
| 88 - 91 | சத்தியம் என்னும் கச்சையை உங்கள் அரையில் கட்டினவர்களாயும், நீதியென்னும் மார்க்கவசத்தைத் தரித்தவர்களாயும்; சமாதானத்தின் சுவிசேஷத்திற்குரிய ஆயத்தம் என்னும் பாதரட்சையைக் கால்களிலே தொடுத்தவர்களாயும்; பொல்லாங்கன் எய்யும் அக்கினியாஸ்திரங்களையெல்லாம் அவித்துப்போடத்தக்கதாய், எல்லாவற்றிற்கும் மேலாக விசுவாசமென்னும் கேடகத்தைப் பிடித்துக்கொண்டவர்களாயும் நில்லுங்கள் இரட்சணியமென்னும் தலைச்சீராவையும், தேவவசனமாகிய ஆவியின் பட்டயத்தையும் எடுத்துக்கொள்ளுங்கள் - எபேசியர் 6:14-17 | | |
| 92, 93 | உன் சுயபுத்தியின்மேல் சாயாமல், உன் முழு இருதயத்தோடும் கர்த்தரில் நம்பிக்கையாயிருந்து, உன் வழிகளிலெல்லாம் அவரை நினைத்துக்கொள்; | | |

| | | | |
|---|---|---|---|
| | அப்பொழுது அவர் உன் பாதைகளைச் செவ்வைப்படுத்துவார் - நீதிமொழிகள் 3:5-6 | | |
| 94 | தேவனுடைய வசனமெல்லாம் புடமிடப்பட்டவைகள்; தம்மை அண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு அவர் கேடகமானவர் - நீதிமொழிகள் 30:5 | | |
| 95 | கர்த்தரின் நாமம் பலத்த துருகம்; நீதிமான் அதற்குள் ஓடிச் சுகமாயிருப்பான் - நீதிமொழிகள் 18:10 | | |
| 96 | இவ்விதமாக, நாம் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருக்கிறபடியால், நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துமூலமாய் தேவனிடத்தில் சமாதானம் பெற்றிருக்கிறோம் - ரோமர் 5:1 | | |
| 97 | மேலும் நமக்கு அருளப்பட்ட பரிசுத்தஆவியினாலே தேவஅன்பு நம்முடைய இருதயங்களில் ஊற்றப்பட்டிருக்கிறபடியால், அந்த நம்பிக்கை நம்மை வெட்கப்படுத்தாது - ரோமர் 5:5 | | |
| 98 | ஆகையால், தீங்குநாளிலே அவைகளை நீங்கள் எதிர்க்கவும், சகலத்தையும் செய்துமுடித்தவர்களாய் நிற்கவும் திராணியுள்ளவர்களாகும்படிக்கு, | | |

| | | | |
|---|---|---|---|
| | தேவனுடைய சர்வாயுதவர்க்கத்தையும் எடுத்துக்கொள்ளுங்கள் - எபேசியர் 6:13 | | |
| 99 | நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார் - 1 யோவான் 1:9 | | |
| 100 | எந்தச் சமயத்திலும் சகலவிதமான வேண்டுதலோடும் விண்ணப்பத்தோடும் ஆவியினாலே ஜெபம்பண்ணி, அதன்பொருட்டு மிகுந்த மனஉறுதியோடும் சகல பரிசுத்தவான்களுக்காகவும் பண்ணும் வேண்டுதலோடும் விழித்துக்கொண்டிருங்கள் - எபேசியர் 6:18 | | |

# 10 கட்டளைகள்

1. என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்கவேண்டாம் - யாத் 20:3

2. மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின்கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொரூபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்கவேண்டாம்; நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம் - யாத் 20:4-5

3. உன் தேவனாகிய கர்த்தருடைய நாமத்தை வீணிலே வழங்காதிருப்பாயாக - யாத் 20:7

4. ஓய்வுநாளைப் பரிசுத்தமாய் ஆசரிக்க நினைப்பாயாக - யாத் 20:8

5. உன் தேவனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கிற தேசத்திலே உன் நாட்கள் நீடித்திருப்பதற்கு, உன் தகப்பனையும் உன் தாயையும் கனம்பண்ணுவாயாக - யாத் 20:12

6. கொலை செய்யாதிருப்பாயாக - யாத் 20:13

7. விபசாரம் செய்யாதிருப்பாயாக - யாத் 20:14

8. களவு செய்யாதிருப்பாயாக - யாத் 20:15

9. பிறனுக்கு விரோதமாகப் பொய்ச் சாட்சி சொல்லாதிருப்பாயாக - யாத் 20:16

10. பிறனுடைய வீட்டை இச்சியாதிருப்பாயாக; பிறனுடைய மனைவியையும், அவனுடைய வேலைக்காரனையும், அவனுடைய வேலைக்காரியையும், அவனுடைய எருதையும், அவனுடைய கழுதையையும், பின்னும் பிறனுக்குள்ள யாதொன்றையும் இச்சியாதிருப்பாயாக - யாத் 20:17

# பரமண்டல ஜெபம் / கர்த்தரின் ஜெபம்

| | |
|---|---|
| 1. நீங்கள் ஜெபம்பண்ணவேண்டிய விதமாவது: பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக - மத் 6:9 | 4. எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறதுபோல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும் - மத்தேயு 6:12 |
| 2. உம்முடைய ராஜ்யம் வருவதாக; உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறதுபோலப் பூமியிலேயும் செய்யப்படுவதாக - மத்தேயு 6:10 | 5. எங்களைச் சோதனைக்குட்படப்பண்ணாமல், தீமையினின்று எங்களை இரட்சித்துக்கொள்ளும், ராஜ்யமும், வல்லமையும், மகிமையும் என்றென்றைக்கும் உம்முடையவைகளே, ஆமென், என்பதே - மத்தேயு 6:13 |
| 3. எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை இன்று எங்களுக்குத் தாரும் - மத்தேயு 6:11 | |

# சங்கீதம் 1

| | |
|---|---|
| 1. துன்மார்க்கருடைய ஆலோசனையில் நடவாமலும், பாவிகளுடைய வழியில் நில்லாமலும், பரியாசக்காரர் உட்காரும் இடத்தில் உட்காராமலும், | 4. துன்மார்க்கரோ அப்படியிராமல், காற்றுப் பறக்கடிக்கும் பதரைப்போல் இருக்கிறார்கள் |
| 2. கர்த்தருடைய வேதத்தில் பிரியமாயிருந்து, இரவும் பகலும் அவருடைய வேதத்தில் தியானமாயிருக்கிற மனுஷன் பாக்கியவான் | 5. ஆகையால் துன்மார்க்கர் நியாயத்தீர்ப்பிலும், பாவிகள் நீதிமான்களின் சபையிலும் நிலைநிற்பதில்லை |
| 3. அவன் நீர்க்கால்களின் ஓரமாய் நடப்பட்டு, தன் காலத்தில் தன் கனியைத் தந்து, இலையுதிராதிருக்கிற மரத்தைப்போலிருப்பான்; அவன் செய்வதெல்லாம் வாய்க்கும் | 6. கர்த்தர் நீதிமான்களின் வழியை அறிந்திருக்கிறார்; துன்மார்க்கரின் வழியோ அழியும் |

# சங்கீதம் 15

| | |
|---|---|
| 1. கர்த்தாவே, யார் உம்முடைய கூடாரத்தில் தங்குவான்? யார் உம்முடைய பரிசுத்த பர்வதத்தில் வாசம் பண்ணுவான்? | 4. ஆகாதவன் அவன் பார்வைக்குத் தீழ்ப்பானவன்; கர்த்தருக்குப் பயந்தவர்களையோ கனம்பண்ணுகிறான்; ஆணையிட்டதில் தனக்கு நஷ்டம் வந்தாலும் தவறாதிருக்கிறான் |
| 2. உத்தமனாய் நடந்து, நீதியை நடப்பித்து, மனதாரச் சத்தியத்தைப் பேசுகிறவன்தானே | 5. தன் பணத்தை வட்டிக்குக்கொடாமலும், குற்றமில்லாதவனுக்கு விரோதமாய்ப் பரிதானம் வாங்காமலும் இருக்கிறான். இப்படிச் செய்கிறவன் என்றென்றைக்கும் அசைக்கப்படுவதில்லை |
| 3. அவன் தன் நாவினால் புறங்கூறாமலும், தன் தோழனுக்குத் தீங்குசெய்யாமலும், தன் அயலான்மேல் சொல்லப்படும் நிந்தையான பேச்சை எடுக்காமலும் இருக்கிறான் | |

# சங்கீதம் 23

| | |
|---|---|
| 1. கர்த்தர் என் மேய்ப்பராயிருக்கிறார்; நான் தாழ்ச்சியடையேன். | 4. நான் மரண இருளின் பள்ளத்தாக்கிலே நடந்தாலும் பொல்லாப்புக்குப் பயப்படேன்; தேவரீர் என்னோடேகூட இருக்கிறீர்; உமது கோலும் உமது தடியும் என்னைத் தேற்றும் |
| 2. அவர் என்னைப் புல்லுள்ள இடங்களில் மேய்த்து, அமர்ந்த தண்ணீர்கள் அண்டையில் என்னைக் கொண்டுபோய் விடுகிறார் | 5. என் சத்துருக்களுக்கு முன்பாக நீர் எனக்கு ஒரு பந்தியை ஆயத்தப்படுத்தி, என் தலையை எண்ணெயால் அபிஷேகம்பண்ணுகிறீர்; என் பாத்திரம் நிரம்பி வழிகிறது |
| 3. அவர் என் ஆத்துமாவைத் தேற்றி, தம்முடைய நாமத்தினிமித்தம் என்னை நீதியின் பாதைகளில் நடத்துகிறார் | 6. என் ஜீவனுள்ள நாளெல்லாம் நன்மையும் கிருபையும் என்னைத் தொடரும்; நான் கர்த்தருடைய வீட்டிலே நீடித்த நாட்களாய் நிலைத்திருப்பேன் |

# சங்கீதம் 117

| | |
|---|---|
| 1. ஜாதிகளே, எல்லோரும் கர்த்தரைத் துதியுங்கள்; ஜனங்களே, எல்லாரும் அவரைப் போற்றுங்கள் | 2. அவர் நம்மேல் வைத்த கிருபை பெரியது; கர்த்தரின் உண்மை என்றென்றைக்குமுள்ளது. அல்லேலூயா |

# சங்கீதம் 121

| | |
|---|---|
| 1. எனக்கு ஒத்தாசை வரும் பர்வதங்களுக்கு நேராக என் கண்களை ஏறெடுக்கிறேன் | 4. இதோ, இஸ்ரவேலைக் காக்கிறவர் உறங்குவதுமில்லை தூங்குகிறதுமில்லை |
| 2. வானத்தையும் பூமியையும் உண்டாக்கின கர்த்தரிடத்திலிருந்து எனக்கு ஒத்தாசை வரும் | 5. கர்த்தர் உன்னைக் காக்கிறவர்; கர்த்தர் உன் வலதுபக்கத்திலே உனக்கு நிழலாயிருக்கிறார் |
| 3. உன் காலைத் தள்ளாடவொட்டார்; உன்னைக் காக்கிறவர் உறங்கார் | 6. பகலிலே வெயிலாகிலும், இரவிலே நிலவாகிலும் உன்னைச் சேதப்படுத்துவதில்லை |

| | |
|---|---|
| 7. கர்த்தர் உன்னை எல்லாத் தீங்குக்கும் விலக்கிக் காப்பார்; அவர் உன் ஆத்துமாவைக் காப்பார் | 8. கர்த்தர் உன் போக்கையும் உன்வரத்தையும் இதுமுதற்கொண்டு என்றைக்குங் காப்பார் |

## சங்கீதம் 128

| | |
|---|---|
| 1. கர்த்தருக்குப் பயந்து, அவர் வழிகளில் நடக்கிறவன் எவனோ, அவன் பாக்கியவான் | 4. இதோ, கர்த்தருக்குப் பயப்படுகிற மனுஷன் இவ்விதமாய் ஆசீர்வதிக்கப்படுவான் |
| 2. உன் கைகளின் பிரயாசத்தை நீ சாப்பிடுவாய்; உனக்குப் பாக்கியமும் நன்மையும் உண்டாயிருக்கும் | 5. கர்த்தர் சீயோனிலிருந்து உன்னை ஆசீர்வதிப்பார்; நீ ஜீவனுள்ள நாளெல்லாம் எருசலேமின் வாழ்வைக் காண்பாய் |
| 3. உன் மனைவி உன் வீட்டோரங்களில் கனிதரும் திராட்சக்கொடியைப்போல் இருப்பாள்; உன் பிள்ளைகள் உன் பந்தியைச் சுற்றிலும் ஒலிவமரக் கன்றுகளைப்போல் இருப்பார்கள் | 6. நீ உன் பிள்ளைகளின் பிள்ளைகளையும், இஸ்ரவேலுக்கு உண்டாகும் சமாதானத்தையும் காண்பாய் |

# சங்கீதம் 134

| | |
|---|---|
| 1. இதோ, இராக்காலங்களில் கர்த்தருடைய ஆலயத்தில் நிற்கும் கர்த்தரின் ஊழியக்காரரே, நீங்களெல்லாரும் கர்த்தரை ஸ்தோத்திரியுங்கள் | 2. உங்கள் கைகளைப் பரிசுத்த ஸ்தலத்திற்கு நேராக எடுத்து, கர்த்தரை ஸ்தோத்திரியுங்கள் |
| 3 வானத்தையும் பூமியையும் உண்டாக்கின கர்த்தர் சீயோனிலிருந்து உன்னை ஆசீர்வதிப்பாராக | |


என் மகனே, கேள், என் வார்த்தைகளை
ஏற்றுக்கொள்; அப்பொழுது உன் ஆயுசின் வருஷங்கள்
அதிகமாகும் - நீதி 4:10
MEMORIZE
www.WordOfGod.in